22nd February 1961]

SRI N. R. THIAGARAJAN : டோபிகானு, பாக்ஸ் ஸ்டால் முதலியன கட்டுவதை மூன்ருவது திட்டத்திலாவது சேர்த்துக் கொள்ளப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இதை கைத் தொழில்-தொழிலாளர்-கூட்டுறவு இலாகாதான் கட்டிக்கொடுக் கிறது. ஆகவே அதன் வழியாக இந்த கேள்வியை கேட்கலாம்.

*Kovilpatti Panchayat*

* 399 Q.—SRI V. SUBBIAH : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கோவில்பட்டி பெரிய பஞ்சாயத்தை நகராட்சி மன்றமாக மாற்றும் உத்தேசமுண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Yes, Sir. The matter is under consideration.

SRI V. SUBBIAH : ஸார், இந்த கோவில்பட்டி பஞ்சாயத்தில் குறிப்பாக 40 ஆயிரம் ஜனத்தொகையும் 2 லட்சம் ரூபாய் வருமானமும் இருக்கிறது. பஞ்சாயத்து சட்டப்படி 20 ஆயிரம் ஜனத்தொகையும் 1 லட்சம் ரூபாய் வருமானமும் இருந் தால் முனிசிபாலிட்டியாக மாற்றலாம் என்று சொல்லப்பட்டிருக் கிறது. ஆனல் அது எட்டளவில்தான் இருப்பதாக தெரிகிறது. அந்த பஞ்சாயத்தை முனிசிபாலிட்டியாக மாற்றவேண்டும் என்று கோரியிருந்தும் இதுவரை நடவடிக்கை எடுக்காமல் இருப் பதற்கு காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதை நகர சபையாக மாற்றவேண்டும் என்பதற்காகத்தான் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

*Panchayat President (Pirandiyangarai)*

* 400 Q.—SRI A. VEDARATHNAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி தாலுகா பிராந்தியக்கரையில் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து தலைவரிடம் பழைய தற்காலிகத் தலைவர் சார்ஜ் கொடுக்க மறுப்பதாக சர்க்காருக்குப் புகார் வந்திருக்கிறதா ?

(இ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது ?

(உ) தலைவர் தேர்தல் எப்போது நடந்தது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

[22nd February 1961

(*b*) The Divisional Panchayat Officer, Mannargudi has been asked by the Collector of Thanjavur to see that the ex-temporary President of the Piranthiangarai Panchayat hands over charge at once to the new President, taking police help if necessary.

(*c*) The election of the President of the Panchayat was completed on 2nd February 1960.

**SRI A. VEDARATHNAM** : ஸார், இந்த பஞ்சாயத்து போர்டு தலைவர்களில் பலர் தேர்தலுக்கு நின்று தோற்றால் புதிதாக வருகின்ற பஞ்சாயத்துத் தலைவர்களிடம் சார்ஜ் கொடுக்க மறுத்து விடுகிறார்கள். அப்படியில்லாமல் உடனடியாக சார்ஜ் பெறுகின்ற முறையில், பஞ்சாயத்துத் தலைவர் பதவியை விட்ட பிறகுதான் தேர்தலுக்கு நிற்க வேண்டுமென்று விதி செய்தால் கஷ்டம் இராது அல்லவா? இதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யுமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இது தஞ்சாவூர் பண்பாகத்தான் இருக்கிறது. ஒரு இடத்தில் இந்த வியாதி இருக்கிறது என்பதற்காக விதிகளையே திருத்தவேண்டும் என்று சொல்வது சரியல்ல என்று நினைக்கிறேன்.

*Pre-extension C.D. Blocks*

* 401 *Q.*—**SRI S. M. ANNAMALAI** : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் அக்டோபரில் எந்தெந்த இடங்களில் Pre-extension C.D. Blocks ஆரம்பிக்கப்பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM : A list[a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI** : ஸார், பிளாக்குகளை பொறுக்கும் போது டிஸ்ட்ரிக்ட் டெவலப்மென்ட் கௌன்சில் சிபாரிசு செய்தவைகளை கவனிக்காமல் வேறு பிளாக்குகளை எடுத்துக்கொள்ளுவதற்கு சர்க்கார் என்ன காரணம் கூறுகிறார்கள்?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : சில இடங்களில் கனம் அங்கத்தினர் போன்றவர்களை சமாதானப்படுத்துவதற்கு அங்கே ஒப்புகொள்ளப்படுகிறது. அதை அனுசரித்து தீர்மானமும் செய்யப்படுகிறது. ஆனால் அதில் எது நியாயமாக இருக்கிறது என்பதைப் பார்த்து அதன்படி நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

*Iron deposits*

* 402 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any iron deposits have been found in the Ramanathapuram district; and

[a] **Printed as Appendix III on page 246 infra.**